OL/2018/15/T-I, II



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் / Department of Examinations, Sri Lanka

**15 T I,II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2018 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2018 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2018

| | |
|---|---|
| ක්‍රිස්තියානි ධර්මය | I, II |
| கிறிஸ்தவம் | I, II |
| Christianity | I, II |

**03. 12. 2018 / 0830 - 1140**

පැය තුනයි
*மூன்று மணித்தியாலம்*
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

**வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.**

## கிறிஸ்தவம் I

**கவனிக்க :**

(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.

(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.

(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**

(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** கிறிஸ்து பிறப்பதற்கு பல ஆண்டுகளுக்கு முன்னர்,
(1) ஞானிகள் ஏரோது அரசனை சந்திக்கச் சென்றனர்.
(2) இறைவாக்கினர் பிறப்பைப் பற்றி இறைவாக்கு உரைத்தனர்.
(3) அன்னாவும் சிமியோனும் மரியாவைப் பார்க்கச் சென்றனர்.
(4) திருமுழுக்கு யோவான் பிறப்புப் பற்றி கூறினார்.

**2.** எசாயா இறைவாக்கினர் முன்னுரைத்தப்படி, பிறக்கும் குழந்தைக்கு இடவேண்டிய பெயர்
(1) எலியா (2) மரனாதா (3) காபிரியேல் (4) இம்மானுவேல்

**3.** "இதோ என் தூதனை அனுப்புகிறேன், அவர் எனக்கு முன் சென்று வழியை ஆயத்தம் செய்வார்..." இவ்வாறு மலாக்கி இறைவாக்கினர் யாரைப் பற்றி முன்னுரைத்தார்?
(1) இயேசு கிறிஸ்து (2) எலியா
(3) திருமுழுக்கு யோவான் (4) நிக்கதேமு

**4.** பின்வருவனவற்றுள் இயேசுவைப் பற்றி திருமுழுக்கு யோவானால் உரைக்கப்பட்டது எது?
(1) இதோ கடவுளின் ஆட்டுக்குட்டி! இவரே உலகத்தின் பாவத்தை போக்குபவர்.
(2) ஆண்டவருடைய ஆவி என்மேல் உள்ளது.
(3) அடிப்பதற்கு இழுத்துச் செல்லப்பட்ட ஆட்டுக்குட்டி போல் தம் வாயைத் திறவாதிருந்தார்.
(4) இவரே மெசியா.

**5.** இயேசுவானவர் பிறப்புடன் தொடர்புள்ள சில அடையாளங்கள் கீழே தரப்பட்டுள்ளன.
A - விண்மீன்
B - ஆயர்கள்
C - ஞானிகள் / அரசர்கள்
D - மாட்டுத்தொழுவம்
இவற்றுள் மத்தேயு நற்செய்தியில் தரப்பட்டுள்ள அடையாளங்களாவன
(1) A யும் B யும் (2) A யும் C யும் (3) B யும் C யும் (4) C யும் D யும்

6. இயேசுவானவரின் பணியின்போது காணக்கிடைத்த எமது வாழ்வில் கடைப்பிடிக்கவேண்டிய சிறப்பான குணவியல்புகள் யாவை?
   (1) பொறுமை, அன்பு, நீதி
   (2) நெகிழ்வுத்தன்மை, வளைந்து கொடுத்தல், பிறருடன் இணங்கி நடத்தல்
   (3) நீதி, உடன் தீர்வுகாணல், உகந்தவராய் இருத்தல்
   (4) செபித்தல், விசுவாசம், பிறருடன் இணங்கி நடத்தல்

7. கீழ் காண்பவை யூத சமயச் சடங்குகளும் மரபுகளுமாகும்.
   A - திருமுழுக்கு
   B - விருத்தசேதனம்
   C - பெயர் வைத்தல்
   D - தூய்மைப்படுத்தல்

   இவற்றுள் இன்றைய கிறிஸ்தவர்கள் பின்பற்றுவன
   (1) A யும் B யும் (2) A யும் C யும்
   (3) B யும் C யும் (4) C யும் D யும்

8. திருமறையின்படி, குழந்தை இயேசு தமது பெற்றோர் மரியா, யோசேப்புடன் நாசரேத்திற்குத் திரும்பி வந்த பின்னர்,
   (1) ஏனைய பிள்ளைகளுக்கு கடவுளைப் பற்றி கற்பித்து வளர்ந்து வந்தார்.
   (2) செபாலயத் தலைவர்களுடன் தர்க்கித்தார்.
   (3) ஞானத்திலும் உடல் வளர்ச்சியிலும் மிகுந்து, கடவுளுக்கும் மனிதருக்கும் உகந்தவராய் வாழ்ந்தார்.
   (4) உரிய காலத்தில் திருமறையிலிருந்து அமைதியைப் பெற்றுக்கொள்வார் என அறிந்து வளர்ந்தார்.

9. இயேசுவானவர் கலிலேயாவின் நாசரேத்து நகரில், மக்களிடத்தில் முன்வைத்த சில கூற்றுகள் கீழே தரப்பட்டுள்ளன.
   A - மருத்துவரே உம்மை நீரே குணப்படுத்திக் கொள்ளும்.
   B - ஆழத்திற்குப் போய் உங்கள் வலைகளைப் போடுங்கள்.
   C - இறைவாக்கினர் எவரும் தம் சொந்த ஊரில் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை.
   D - அமைதியாய் அவனை விட்டு வெளியே வா.

   இவற்றில் நாசரேத்து செபாலய பிரசங்கத்துடன் தொடர்புடையவை
   (1) A யும் B யும் (2) A யும் C யும்
   (3) B யும் C யும் (4) C யும் D யும்

10. இயேசுவானவரின் திருப்பணியுடன் தொடர்புள்ள கடலின் மூன்று பெயர்களாவன
   (1) கலிலேயாக் கடல், யோர்தான் நதி, மத்திய தரைக்கடல் என்பனவாகும்.
   (2) கலிலேயாக் கடல், பெத்சாய்தா குளம், மத்திய தரைக்கடல் என்பனவாகும்.
   (3) கலிலேயாக் கடல், மத்திய தரைக்கடல், திபேரியாக் கடல் என்பனவாகும்.
   (4) கலிலேயாக் கடல், திபேரியாக் கடல், கெனேசரேத்து ஏரி என்பனவாகும்.

11. இயேசுவைப் பின்பற்றுவதற்கு அழைக்கப்பட்ட நீங்கள், சீடத்துவம் பற்றி புரிந்து கொள்வது,
   (1) பகுதி நேரம் பணி செய்ய அர்ப்பணித்தல்
   (2) முழுநேரப் பணி செய்யத் தயங்காமை
   (3) பயிற்சிப் பெற்று திருப்பணிக்கு அனுப்பப்படுதல்
   (4) தினமும் சிலுவையை தூக்கிச் செல்லும்படி பிறரைப் பணித்தல்

12. இயேசுவானவரின் கூற்றின்படி, இறைவசனத்தைக் கேட்டு, அதனைப் பின்பற்றுபவர்கள்,
   (1) வசனத்தைப் பிறருடன் பகிர்ந்து கொள்வோர் ஆவர்.
   (2) வசனத்தைக் கேட்போர் ஆவர்.
   (3) இயேசுவின் தாயும் சகோதரரும் ஆவர்.
   (4) இயேசுவானவரின் வார்த்தையைக் கேட்டு தியானிப்பவர் ஆவர்.

[பக். 3 ஐப் பார்க்க

**13.** இயேசுவானவருடன் தொடர்புள்ளவர்களின் பெயர்கள் கீழே தரப்பட்டுள்ளன.




மேற்குறிப்பிட்டவர்கள் தொடர்பாக பொதுவான பண்புகளாக அமைவது

(1) இயேசுவானவர்களின் பன்னிரண்டு சீடர்களைச் சேர்ந்தவர்கள் ஆவர்.
(2) இயேசுவானவரின் இரகசிய சீடர்கள் ஆவர்.
(3) இயேசுவானவரின் பணிக்கு உதவியவர்கள் ஆவர்.
(4) இயேசு அவர்கள் அனைவரையும் அவர்களின் வீட்டில் சந்தித்தவர்கள் ஆவர்.

**14.** 'பிறயினத்தவரின் திருத்தூதர்' என்று அழைக்கப்பட்டவர்

(1) பேதுரு (2) லூக்கா
(3) பவுல் (4) திருமுழுக்கு யோவான்

**15.** அனைத்து வேறுபாடுகளையும் களைந்து, பிறருக்கு உதவி செய்வதன் முக்கியத்துவத்தை வெளிப்படுத்துவதற்கு இயேசுவானவர் உபயோகித்த உவமை

(1) பரிசேயனும் வரி தண்டுபவரும் (2) காணாமற்போன மகன்
(3) நல்ல சமாரியன் (4) செல்வந்தரும் இலாசரும்

**16.** கிறிஸ்தவ விழுமியங்களுக்குச் சவாலாய் அமைபவர்களை எதிர்நோக்கும்போது, இயேசுவானவர் பரிசேயருக்கும் சதுசேயருக்கும் முன்வைத்த துலங்கல்கள் / மாறுத்தரங்கள் எமக்கு கற்றுத்தருவது யாது?

(1) அவர்களை மகிழ்வுறச் செய்து அவர்களின் மனதை வெற்றிகொள்ள வேண்டும்.
(2) அவர்களுக்கு எதிராகச் செயற்பட்டு மக்கள் மத்தியில் வெற்றிப்பெற வேண்டும்.
(3) அவர்களுக்கு எதிர்மாறான கருத்துகளை முன்வைத்து தோல்வியுறச் செய்ய வேண்டும்.
(4) அவர்களின் மெய்யான வினாக்களையும், அல்லாதவற்றையும் அறிந்து, ஏற்ற பிரதிச்செயல் செய்தல் வேண்டும்.

**17.** "சோதனைக்கு உட்படாதிருக்க விழித்திருந்து இறைவனிடம் வேண்டுங்கள்." இவ்வாறான ஒரு வேண்டுகோளை நீர் உமது நண்பரிடம் விடுக்கவேண்டி ஏற்படுவது

(1) அவருக்கு முக்கிய பொறுப்பு கொடுக்கப்பட்டிருக்கும்போதாகும்.
(2) அவர்கள் உம்முடன் மகிழ்ந்திருக்கும்போதாகும்.
(3) அவர்கள் சோர்வுடன் நித்திரை மயக்கமாக இருக்கும்போதாகும்.
(4) அவர்கள் சோம்பலுறும்போதாகும்.

**18.** இலங்கையில், துஷ்பிரயோகத்திற்கு உள்ளாக்கப்பட்ட பிள்ளைகளுக்கென கிறிஸ்தவ நிறுவனம் செய்யவேண்டிய முக்கிய செயல்,

(1) பெற்றோருக்கும் பிள்ளைகளுக்கும் அறிவுறுத்தும் நிகழ்வுகளை நடத்துதலாகும்.
(2) பிள்ளைகள் வாழ்வதற்கு பணம் கொடுத்தலாகும்.
(3) அரசியலில் ஈடுபட்டு நிலைமையை மாற்றுவதாகும்.
(4) உண்மைகளை அதிகாரிகளுக்கு அறிவித்து புனர்வாழ்வு அளிப்பதன் முக்கியத்துவத்தை உணர்த்துவதாகும்.

**19.** தாக்கப்பட்டு பிலிப்பி சிறைச்சாலையில் வைக்கப்பட்டிருந்த பவுல், சீலா என்போரின் செயல்களிலிருந்து நாம் கற்கும் பாடமாவது,

(1) அநீதியின் விளைவுகளுக்கு எதிராக எழுந்து நிற்றலாகும்.
(2) பிரச்சினைகளின் மத்தியிலும் கடவுளை துதித்து செபித்தலாகும்.
(3) சிறைக்காவலனுக்கு திருமுழுக்கு கொடுத்து போதித்தலாகும்.
(4) சிறையில் இருக்கும்போது ஆர்ப்பாட்டம் செய்தலாகும்.

[பக். 4 ஐப் பார்க்க

**20.** பின்வருவனவற்றுள் இயேசுவானவருக்கு பணிபுரிதல், சடங்காச்சாரங்களுக்கு அடிமையாதல் ஆகியவற்றுக்கிடையில் உள்ள வேறுபாட்டை விளக்கும் நிகழ்வுகள் யாவை?

A - பன்னிரு வயதில் ஆலயத்திற்குச் செல்லல்
B - உணவருந்தும் முன் கை கழுவாததைக் கண்டு ஆச்சரியப்பட்ட பரிசேயன்
C - பஸ்கா விழாவின்போது தேவாலயம் செல்லுதல்
D - கை சூம்பியவரை சபத் நாளில் குணப்படுத்தல்

(1) A யும் B யும் (2) B யும் C யும் (3) B யும் D யும் (4) C யும் D யும்.

**21.** இயேசுவின் நியாய விசாரிப்பிலிருந்து நாம் கற்கும் முக்கிய பாடமாவது,

(1) எப்போதும் சட்டம் நீதியைப் பிறப்பிக்கும்.
(2) விசாரணையின்போது குற்றஞ்சாட்டப்பட்டவருக்கு எல்லா சந்தர்ப்பங்களிலும் பேசுவதற்கு இடமளித்தல் வேண்டும்.
(3) சட்டத்தின் முன் நிறுத்தப்படுபவர்கள் யாவரும் விடுவிக்கப்படுவர்.
(4) சில வேளைகளில் குற்றமற்றவர்களும் குற்றவாளியாகத் தீர்ப்பளிக்கப்படலாம்.

**22.** இயேசுவின் துன்புறுதல், மரணம் ஆகியன பற்றிய சில கூற்றுகள் கீழே தரப்பட்டுள்ளன.

A - "நீரே கிறிஸ்துவாகிய கடவுள்"
B - "நீ மனந்திருந்திய பின் உன் சகோதரர்களை உறுதிப்படுத்து"
C - "இயேசுவே நீர் ஆட்சியுரிமை பெறும்போது என்னை நினைவிற் கொள்ளும்"
D - "நீ யூதர்களின் அரசனானால், உன்னைக் காப்பாற்றிக் கொள்"

இவற்றுள் சிலுவையில் அறையப்பட்ட சந்தர்ப்பத்தில் இயேசுவானவருக்கு கூறப்பட்டவை

(1) A யும் B யும் (2) A யும் C யும் (3) B யும் C யும் (4) C யும் D யும்

**23.** வெறுமையான கல்லறை, ஆணியறையப்பட்ட கைகளிலும் பாதங்களிலும் உள்ள தழும்புகள் வெளிப்படுத்துவது

(1) இயேசுவானவர் உயிரோடிருக்கிறார் என்பதாகும்.
(2) இயேசுவானவரின் துன்புறுதலைப் பற்றியதாகும்.
(3) இயேசுவானவர் சிலுவையில் அறையப்பட்டமையாகும்.
(4) இயேசுவானவரின் தோற்றம் மாறுதலாகும்.

**24.** தூய ஆவியானவரின் சில செயற்பாடுகள் கீழே தரப்பட்டுள்ளன.

A - தூய ஆவியானவர் புறாவைப் போல் இறங்கினார்.
B - தூய ஆவியானவராலும் நெருப்பாலும் திருமுழுக்களித்தார்.
C - விண்ணகம் திறக்க தூய ஆவியானவர் கீழே இறங்கினார்.
D - தோற்றம் மாறிய தினத்தில் தூய ஆவியானவர் கீழிறங்கினார்.

இயேசுவானவரின் திருமுழுக்கின்போது, தூய ஆவியானவரின் செயற்பாடுகளாவன

(1) A யும் B யும் (2) A யும் C யும் (3) B யும் C யும் (4) C யும் D யும்

**25.** நன்றி கூறிய ஒருவரைப் பற்றி இயேசுவானவர் சிறப்பாக எடுத்துரைப்பதற்கு ஏதுவாயிருந்தது

(1) சூம்பிய கையுடையவன் குணமாக்கப்பட்ட நிகழ்வு
(2) குணமாக்கப்பட்ட பத்து தொழுநோயாளரில் சமாரியர் ஒருவர் மட்டும் மீண்டும் வந்து நன்றி கூறிய நிகழ்வு
(3) குருடனான பர்த்திமேயு குணப்படுத்தப்பட்ட நிகழ்வு
(4) இரத்தப்போக்குள்ள பெண் குணப்படுத்தப்பட்ட நிகழ்வு

**26.** இயேசுவானவர், குடும்பம் பற்றிய எண்ணக்கருவுக்கு புது வடிவம் கொடுத்தது

(1) பன்னிரண்டு வயதில் பெற்றோருக்கு கீழ்படிந்திருத்தல் மூலமாகும்.
(2) சீடருக்கு குடும்ப செபத்தைக் கற்பித்தல் மூலமாகும்.
(3) இறைவார்த்தையைக் கேட்டு அதன்படி செய்பவர்களே எனது தாயும் சகோதரரும் ஆவர் என்று கூறியதன் மூலமாகும்.
(4) ஜெருஸலம் தேவாலயத்தில் வைத்து, தமது பிதா கடவுள் என்று கூறியதன் மூலமாகும்.

**27.** "அமைதி ஏற்படுத்துவோர் பேறுபெற்றோர்..." இயேசுவின் இக்கூற்றை நிறைவுசெய்யும் வசனத்தைத் தெரிவுசெய்க

(1) ஏனெனில் அவர்கள் விண்ணக அரசுக்கு நுழைபவர்கள்
(2) அவர்கள் கடவுளின் பிரசன்னத்தில் இருப்பர்
(3) அவர்கள் கடவுளைக் காண்பர்
(4) ஏனெனில் அவர்கள் கடவுளின் மக்கள் என அழைக்கப்படுவர்



[பக். 5 ஐப் பார்க்க

**28.** மக்களின் பாவம் பற்றி உணர்த்தி, அவர்களை தூய வாழ்வை மேற்கொள்வதற்கு அழைத்த இறைவாக்கினர்
(1) ஆமோஸ் (2) எசாயா (3) மீக்கா (4) எரேமியா

**29.** சமுதாயத்தில் இறைவனின் விழுமியங்களை நேரடியாக உணரச்செய்யும் வசனங்களில் சிறப்பானது யாது?
(1) ஆடம்பர ஆடைகளை அணிந்தவர்களையும் ஏழைகளையும் வேறுபடுத்தி பணி செய்வது.
(2) நான் பசியில் இருந்தேன். நீங்கள் உணவு கொடுத்தீர்கள். நான் தாகமாக இருந்தபோது குடிக்க கொடுத்தீர்கள்.
(3) அதிகாரத்தில் இருப்பவர்களுக்கும் அரசிற்கும் கீழ்ப்படிந்திருத்தல்.
(4) தமது வாழ்க்கைத் தேவைகளை பூர்த்தி செய்து கொள்வதோடு சமுதாய நலனுக்காகச் செயற்படுதல்

**30.** பின்வரும் கூற்றுக்களில் பெந்தகொஸ்தே தினத்தில் பேதுருவின் பிரசங்கத்தில் வெளிப்படுத்தப்பட்ட கூற்றுக்களையும் நிகழ்வுகளையும் சரியாகக் காட்டும் தொகுதியினைத் தெரிவுசெய்க.
A - நீங்கள் சிலுவையில் அறைந்த இயேசு நம்மோடிருக்கிறார்.
B - இஸ்ரயேலின் வல்லமை விளங்கியது.
C - பேதுரு தனது வாழ்வின் பின்னணியை விளக்கினார்.
D - மூவாயிரம் பேர் இயேசுவை ஏற்றுக்கொண்டனர்.
(1) A யும் B யும் (2) A யும் D யும் (3) B யும் C யும் (4) C யும் D யும்

**31.** மெசியாவின் மூலம் நாம் பெற்றுக்கொள்ளும் ஒளி
(1) அமைதியும் சமாதானமும்
(2) நோய்களிலிருந்து விடுதலை
(3) அரசியல் விடுதலை
(4) எல்லாத் துறைகளிலும் முழுமையான வாழ்வு பெறல்

**32.** ஆதித் திருச்சபையின் வழிபாட்டு வாழ்வில் முக்கியத்துவமிக்க விடயங்களுடன் **தொடர்பில்லாத** ஒரு காரணி
(1) சபத் சட்டங்களுக்கு ஏற்ப செயற்படுதல்
(2) அப்பம் பிட்டலில் பங்குபற்றுதல்
(3) செபத்தின் மூலம் ஒருவரின் வாழ்வைப் பலப்படுத்துதல்
(4) திருமறை கற்றலின்படி வாழ்வை சீரமைத்தல்

**33.** "நானே வாயில்: என் வழியாக நுழைவோருக்கு ஆபத்து இல்லை... மேய்ச்சல் நிலத்தைக் கண்டுக் கொள்வர்" இக்கூற்றின் மூலம் இயேசுவானவர் வெளிப்படுத்துவது
(1) தேவாலயத்தின் பிரதான வாசல் மூலம் உள்ளே செல்வதன் மகிழ்ச்சி
(2) ஒவ்வொரு ஞாயிறு தினத்திலும் தேவாலய வழிபாட்டிற்குச் சென்று நிறைவு பெறுதல்
(3) இயேசுவானவர் உணவை வழங்கி தேவைகளை நிறைவு செய்வார்
(4) இயேசுவானவரை ஏற்று, அவரைப் பின்பற்றுபவர் மீட்கப்படுவர்

**34.** மோசேயின் வாழ்வில் காணப்பட்ட எந்த முக்கிய சிறப்பம்சத்தை நமது வாழ்விலும் மேற்கொள்ளலாம்?
(1) தமது குடும்பத்துடன் புதிய இடத்திற்கு இடம்பெயர்தல்
(2) ஒருவர் தனது சொந்த திறமைகளில் முற்றிலும் நம்பிக்கை வைத்தல்
(3) நிலையற்ற சூழ்நிலையிலும் தலைமைத்துவம் அளித்தல்
(4) சுய நம்பிக்கையுடன் செயற்படுதல்

**35.** ஒற்றுமை பற்றி இயேசுவானவர் கூறியது,
(1) முழு உடலும், சரீரத்தின் தலையான இயேசுவில் ஒன்றுபட்டுள்ளது.
(2) யூதருக்கும் பிற இனத்தவருக்கும் இடையே இருந்த பிரிவினையின் நடுச்சுவர் இடிக்கப்பட்டது.
(3) இனி உங்களிடையே யூதர் என்றும் அடிமைகள் என்றும் உரிமைக் குடிமக்கள் என்றும் ஆண், பெண் என்றும் வேறுபாடு இல்லை.
(4) "ஒரே மந்தையும் ஒரே ஆயரும்" என்ற நிலை ஏற்படும்.

**36.** எருசலேம் மகாநாட்டுடன் **தொடர்பில்லாத** ஒரு விடயம்
(1) அதில் 70 மூப்பர்கள் அங்கம் வகித்தனர்.
(2) பவுலின் முதலாம் மறை தூதுரைப் பிரயாணத்தின் பின்னர் கூட்டப்பட்டது.
(3) யூதருக்கும் பிற இனத்தவருக்கும் இடையேயிருந்த முரண்பாடுகள் தீர்க்கப்பட்டன.
(4) யாக்கோபு தலைமைத்துவம் வழங்கினார்.

[பக். 6 ஐப் பார்க்க

**37.** புயற்காற்றின் மத்தியில் சிறைக்கைதியாக இருந்த பவுலின் முன்மாதிரியான செயற்பாடு, பிரச்சினைகளின் மத்தியில் செல்லும் கிறிஸ்தவர்களான எமக்கு எவ்வாறு உதவுகின்றது?
(1) வாழ்வின் புயல்களைத் தவிர்க்க உதவுகிறது.
(2) வாழ்வின் புயல்களின் மத்தியில் மட்டும் பிறரின் உதவியை நாட அறிவுறுத்துகின்றது.
(3) சமுதாயத்தில் பிரச்சினைகள் ஏற்படுத்துவோர் மீது குற்றம் சுமத்த கூறுகின்றது.
(4) விசுவாசத்தில் உறுதியாயிருந்து, பிறரைத் தைரியப்படுத்த கூறுகின்றது.

**38.** இறையரசின் கொள்கைகளை வெளிப்படுத்துவதற்கு இயேசுவானவர் கூறிய உவமைகளாவன
(1) பரிசேயனும் வரிதண்டுபவரும், காணாமற்போன ஆடு
(2) பெரிய விருந்து, காணாமற்போன ஆடு
(3) காணாமற்போன வெள்ளிக்காசு, கடுகு விதை
(4) பெரிய விருந்து, தாலந்துகள்

**39.** கோபுரம் கட்டுதல், அரசர் போர் தொடுக்கப்போகும் முன்னர் என்பன பற்றிய இரண்டு உதாரணங்களின் மூலம், இயேசுவானவர் முன்வைக்கும் சவாலாவது
(1) தன்னலத்தை விட்டு செயற்படுதல்
(2) தன் உயிரைத் தியாகம் செய்தல்
(3) சீடனாகுவதற்கு முன்னர் தீர்மானம் எடுத்தலின் முக்கியத்துவம்
(4) சிலுவையை எடுத்துக் கொண்டு முன் செல்வதற்கு ஆயத்தமாகுதலின் முக்கியத்துவம்

**40.** பின்வருவன இயேசு தமக்கு பல்வேறு இடங்களில் ஏற்பட்ட சோதனைகளுக்கு அளித்த பதில்களாகும்.
A - "மனிதர் அப்பத்தினால் மட்டுமல்ல, மாறாக கடவுளின் வாய்ச்சொல் ஒவ்வொன்றாலும் வாழ்வர்."
B - "என் கண் முன்னாலே நில்லாதே சாத்தானே, நீ எனக்கு தடையாய் இருக்கிறாய்."
C - "உன் கடவுளாகிய ஆண்டவரை வணங்கி, அவர் ஒருவருக்கே பணி செய்வாயாக."
D - "உன் கடவுளாகிய ஆண்டவரை சோதிக்க வேண்டாம்."
இவற்றுள் வனாந்தரத்தில் அளித்த பதில்கள்
(1) A யும் B யும் (2) B யும் C யும் (3) B யும் D யும் (4) C யும் D யும்

* *

**15 T I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2018 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2018 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2018

ක්‍රිස්තියානි ධර්මය I, II
கிறிஸ்தவம் I, II
Christianity I, II

## கிறிஸ்தவம் II

* **முதலாம்** வினாவிற்கும், தெரிவுசெய்யும் மேலும் **நான்கு** வினாக்களுக்குமாக, மொத்தம் **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.
* முதலாம் வினாவின் விடைக்கு **20** புள்ளிகளும் ஏனைய ஒவ்வொரு வினாவின் விடைக்கும் **10** புள்ளிகள் வீதமும் வழங்கப்படும்.

---

**1.** (i) "ஒரு குழந்தை நமக்குப் பிறந்துள்ளார். அவர் திருப்பெயரோ வியத்தகு ஆலோசகர் அமைதியின் அரசர் என்று அழைக்கப்படும்." இவ் இறைவாக்கை கூறிய இறைவாக்கினர் யார்? இந்த இறைவாக்கு யாரின் மூலமாக நிறைவேறியது?

(ii) பின்வரும் இறை வெளிப்படுத்தல்கள் எச்சந்தர்ப்பத்தில் கூறப்பட்டன?

(அ) "என் அன்பான மைந்தர் நீரே, உம் பொருட்டு நான் பூரிப்படைகிறேன்"

(ஆ) "இவரே என் மைந்தர், நான் தேர்ந்துகொண்டவர் இவரே
இவருக்குச் செவி சாயுங்கள்"

(iii) (அ) யூத பஸ்காவின் மூலம், யூதர்கள் எந்த நிகழ்வைக் கொண்டாடுகின்றனர்?

(ஆ) ஈஸ்டர் பண்டிகையின் முக்கியத்துவம் யாது?

(iv) மரணத்தை வென்று அற்புத செயல்களை செய்து, இயேசுவானவர் புது வாழ்வு அளித்த **இரண்டு** சந்தர்ப்பங்களைக் குறிப்பிடுக.

(v) இயேசுவானவரின் மரணத்தின்போது இயற்கையில் ஏற்பட்ட **இரண்டு** ஆச்சரியமிக்க நிகழ்வுகளை எழுதுக.

(vi) (அ) சமுதாயத்தில் நீதியை உருவாக்குவதற்கு திருமுழுக்கு யோவான் முன்வைத்த சவால் யாது?

(ஆ) சமுதாயத்தில் நியாயத்தை நிலைநாட்டுவதற்கு ஆதித் திருச்சபை எவ்வாறு செயற்பட்டது?

(vii) பணியாள் தலைமைத்துவத்தின் பண்புகளை வெளிக்கொண்டு வருவதற்கென இயேசுவானவர் உபயோகித்த **இரண்டு** நிகழ்வுகளை எழுதுக.

(viii) மன்னிப்பின் முக்கியத்துவத்தை எடுத்துக் காட்டுவதற்கு இயேசுவானவர் செயற்பட்ட **இரு** சந்தர்ப்பங்களை தருக.

(ix) "மனிதர்களே, ஏன் இவ்வாறு செய்கிறீர்கள்? நாங்களும் உங்களைப் போன்ற மனிதர்கள்தான்"

(அ) பவுல் இக்கூற்றை எந்த நகரில் வைத்துக் கூறினார்?

(ஆ) இதன் மூலம் கிறிஸ்தவ பணியாளர்களுக்கு பவுல் தரும் செய்தி யாது?

(x) "**மறுபடியும் பிறந்தாலன்றி** எவரும் இறையாட்சியைக் காண முடியாது"

(அ) இயேசுவானவர் இவ்வாறு கூறியது யாருக்கு?

(ஆ) தடித்த எழுத்துகளில் தரப்பட்டுள்ள சொற்கள் வலியுறுத்தும் விடயம் யாது?

[பக். 8 ஐப் பார்க்க

2. "நீர் என் வீட்டிற்குள் அடி எடுத்து வைக்க நான் தகுதியற்றவன். ஆனால் ஒரு வார்த்தை சொல்லும் என் ஊழியர் நலமடைவார்."

   (i) இவ்வார்த்தைகளைக் கூறியவர் யார்? அவர் வகித்த பதவி என்ன?

   (ii) இதற்கு பின்னணியாக அமைந்த சந்தர்ப்பத்தினை சுருக்கமாக விளக்குக.

   (iii) எம்மால் கடைப்பிடிக்கக் கூடிய மேற்கூறிய கூற்றை கூறியவரது விசேட நடத்தைப் பண்புகளையும் இயேசுவானவரால் வெளிப்படுத்திக் காட்டப்பட்ட குணாதிசயத்தையும் விளக்குக.

3. பல நாடுகளிலும் 'பெண்கள் விடுதலை முன்னணி' காணப்படுகின்றது.

   (i) யூத சமுதாயத்தில் பெண்களின் நிலை எத்தகையது என்பதை எடுத்துக்காட்டக்கூடிய **இரண்டு** காரணிகளை தருக.

   (ii) பெண்களுக்கு சமுதாயத்தில் உரிய இடத்தைக் கொடுப்பதற்கென இயேசுவானவர் மேற்கொண்ட **மூன்று** படிமுறைகளை சுருக்கமாக எழுதுக.

   (iii) இலங்கை சமுதாயத்தில் பெண்களின் உரிமைகளை பெற்றுக்கொடுப்பதற்கு இயேசுவின் முன்னுதாரணங்களின் படி, கிறிஸ்தவர்களால் எடுக்கக்கூடிய **ஐந்து** நடவடிக்கைகளை விளக்குக.

4. (i) பவுலின் வாழ்க்கையில் ஏற்பட்ட மனந்திரும்புதல் மாற்றத்தை நன்கு புலப்படுத்தும் சான்றுகள் யாவை?

   (ii) பவுலின் வாழ்க்கைப் பின்னணியானது அவரின் இறை பணியில் எவ்வாறு உதவிற்று என்பதை **மூன்று** உதாரணங்கள் மூலம் விளக்குக.

   (iii) பவுலின் வாழ்க்கை, திருப்பணி என்பவற்றின் மூலம் இன்றைய கிறிஸ்தவர்களாகிய நாம் பின்பற்றவேண்டிய பெறுமதியான பண்புகள் எவை என்பதை விளக்குக.

5. "இன்று இந்த வீட்டிற்கு மீட்பு உண்டாயிற்று... இழந்து போனதைத் தேடி மீட்கவே மானிட மகன் வந்திருக்கிறார்."

   (i) இயேசுவானவர் யாருடைய வீட்டில் மேற்கண்டவாறு கூறினார்? இவ்வாறு கூறப்பட்டதற்கு பின்னணியாக அமைந்த சந்தர்ப்பம் யாது?

   (ii) இயேசுவானவர் காணாமற்போனவர்களைத் தேடுவதற்கும் மீட்பதற்கும் செயற்பட்ட **மூன்று** சந்தர்ப்பங்களைத் தருக.

   (iii) வாழ்க்கையில் வழி தவறிப்போன உமது நண்பர் ஒருவரை நல்வழிப்படுத்துவதற்கு இயேசுவின் பணிகளை அடித்தளமாகக் கொண்டு, உங்களால் எடுக்கக்கூடிய நடவடிக்கைகள் **ஐந்தினை** விளக்குக.

6. "நாம் வாழும் உலகம் அநீதிகள் நிறைந்தது."

   (i) "நீதி வெள்ளமெனப் பொங்கிவரவும், நேர்மை வற்றாத ஆறாகப் பாய்ந்து வரவும்." இக்கூற்றைக் கூறிய இறைவாக்கினரைப் பெயரிட்டு, அவர் எதிர்பார்த்த சமுதாய மாற்றம் எத்தகையது என்பதை தருக.

   (ii) இயேசுவானவர் இவ்வுலகிற்கு வந்து, சமுதாயத்தில் நீதியை நிலைநாட்டுவதில் எவ்வாறு தலையிட்டார் என்பதனை **மூன்று** உதாரணங்கள் மூலம் தெளிவுப்படுத்துக.

   (iii) நீங்கள் வாழுகின்ற சமுதாயத்தில் காணப்படும் பல்வேறு அநீதிகளை விளங்கிக் கொண்டு நீதியையும் நியாயத்தையும் நிலை நாட்டுவதற்கு எவ்வாறு செயற்பட வேண்டும் என்பதற்கான உமது முன்மொழிவுகள் **ஐந்தினை** எழுதுக.

7. கீழே தரப்பட்டுள்ள தலைப்புகளுள் **இரண்டைத்** தெரிவுசெய்து, திருமறை உதாரணங்களுடன் சிறுகுறிப்பு எழுதுக.

   (i) பிறரை உபசரித்தல்

   (ii) பன்மைச் சமுதாயத்தில் நம்மை ஒற்றுமைக்கு அர்ப்பணிப்போம்

   (iii) அன்பு பற்றிய பவுலின் போதனை

   (iv) துன்புறுத்தல் பற்றி இயேசு உருவாக்கிய புதிய மனப்பாங்கு

***